सत्यमेव जयति.

THE MESSENGER OF TRUTH

# சத்திய தூதன்.

Vol. II. No. 1.] NOVEMBER, 1888. [Price 1 Pie Monthly.




## SALVATION.

Salvation means preventing some danger from happening to a person, or delivering him out of the danger after it has occurred. When used of man's soul or spirit, it denotes deliverance from some spiritual calamity, and absolute safety in view of the future. The Salvation of man is the central and fundamental truth contained in the Bible, and the essence of Christianity lies in the only true answer to the question, "How can man obtain salvation?"

I. What is man to be saved from? SIN. This is the great and overwhelming danger that threatens to destroy man. God and man ought to be one in thought, one in feeling, one in sympathy, one in purpose, one in harmony of spiritual character. But sin has come between and separated between God and man. Man has joined himself to sin instead of to God. The Bible says "your iniquities have separated between you and your God, and your sins have hid his face from you." The separating wall of sin is man's own building. The harmony of God and man can be restored only by breaking down and removing the obstacle. Again, sin is a deadly poison, a corrupting influence, the cause of all sorrow, mischief, and destruction to man. Hence man can attain to happiness and security only by the removal of the source of the evil. Thus, we see that there is urgent need of separating man from sin, and of re-uniting him to God. For this purpose Jesus Christ came into the world; and He was specially called Jesus, which means Saviour, because he should "save his people from their sins."

This salvation is twofold in its nature. (i.) It consists in delivering man from the terrible penalty which sin naturally brings upon him who commits it. The remission of the punishment due to sin is one aspect of this salvation: and (ii.) it consists in conquering and destroying the overpowering influence of sin in the heart of man. It delivers man from the tyranny of an internal desire to commit sin. In these two ways Salvation rids man of his greatest enemy and peril.

II. When may man be saved? Now: Salvation is emphatically a blessing for *to-day*. "Now is the acceptable time, now is the day of salvation." The salvation revealed

## இரட்சிப்பு.

ஒருவனுக்கு நேரிடும் ஆபத்தை விலக்குவதும், நேரிட்ட ஆபத்திலிருந்து அவனைத் தப்புவிப்பதும் இரட்சிப்பென்னப்படும். ஒருவனைத் தன் ஆத்ம அபாயத்தினின்று விடுவித்து இனி அவனுக்குவேண்டிய ஆத்மக்ஷேமத்தைத் தருவிப்பதே ஆத்ம இரட்சிப்பு. இதுவே பைபிலென்னும் திருமறையின் அரும் பொருளும், ஆழ்கருத்தும், "ஒருவன் இரட்சிப்படைவதெப்படி" என்னும் கேள்விக்குக் கிறிஸ்துமதம் கூறும் விடையே அதின் சாரமுமாயிருக்கின்றது.

1. மனிதன் எதிலிருந்து தப்பவேண்டியது? பாவத்திலிருந்தே. பாவமானது மனிதனை அழித்துப்போடும் அகோர அபாயமாயிருக்கின்றது. கடவுளும் மனிதனும் சிந்தையிலும், சித்தத்திலும், கருத்திலும், உணர்ச்சியிலும், நினைவிலும், நடத்தையிலும் ஒன்றாயிருக்கவேண்டும். பாவமோ இடையிற்புகுந்து இவ்விருவரையும் பிரத்தியேகமாக்கிவிட்டது. மனிதன் கடவுளை விட்டுவிட்டுப் பாவத்துடன் இசைந்துகொண்டான். "உங்கள் அக்கிரமங்களே உங்களுக்கும் உங்கள் தேவனுக்கும் நடுவாகப் பிரிவினை உண்டாக்குகிறது; உங்கள் பாவங்களே அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கிறது" என்று திருமறையிற் கூறியிருக்கிறது. பாவமாகிய இந்த நடுச்சுவர் மனுஷன் எழுப்பியதே. இந்த நடுச்சுவரை இடித்துத் தகர்த்தாலன்றி அவனுக்கும் கடவுளுக்கும் மீளவும் ஐக்கியம் உண்டாகமாட்டாது. அன்றியும், மனுஷனுக்கு நேரிடும் இன்னல், இடைஞ்சல், அல்லல், அவதியாகிய சர்வசங்கடத்துக்கும் கடும்விஷமாகிய இப்பாவமே காரணம். இத்தீய காரணம் நீங்கினாலன்றி மனிதனுக்குச் சுகமும் சௌக்கியமும் லபிக்கமாட்டாது. ஆதலால் அவன் பாவத்தினின்றும் பிரிந்து கடவுளோடு ஐக்கியமாகுதல் அத்தியாவசியமாயிருக்கின்றது. இது காரணத்திற்காகவே இயேசுகிறிஸ்து இவ்வுலகத்தில் உதித்தார்; அவர் "தமது சனத்தைத் தங்கள் பாவங்களிலிருந்து விடுவிக்கிறவரானதால்" இரட்சகர் என்று அர்த்தங்கொள்ளும் "இயேசு" என்னும் நாமத்தை அவர் சிறப்புப்பெயராய்ச் சூடியிருக்கிறார்.

இந்த இரட்சிப்பு இரண்டு தன்மையது. (i) அது பாவஞ்செய்தவன் பெறவேண்டிய பயங்கரமான தண்டனையினின்று அவனை விடுவிக்கிறது. இது இரட்சிப்பின் ஒருபாகம்; (ii) மனிதனுடைய உள்ளத்திலிருக்கும் பாவத்தின் பலத்தை ஒடுக்கி அந்தச் செயிக்கின்றது. பாவஞ்செய்யவேண்டுமென்கிற ஒழியாத ஆசையை அது அறுத்துவிடுகின்றது. இவ்விருவிதமாய் இரட்சிப்பானது மனுஷனுடைய கொடிய சத்துருவையும் அதின் அபாயத்தையும் நிவிர்த்திசெய்கின்றது.

2. மனிதன் எப்பொழுது இரட்சிக்கப்படலாம்? இப்பொழுதே. இரட்சிப்பானது இன்று பெற்றுக்கொள்ளத்தக்க ஆசீர்வாதமாயிருக்கிறது. "இதுவே தகுதியான காலம், இதுவே இரட்சணிய நாள்." திருமறையில் வெளியாகி வற்புறுத்தியிருக்கும் இரட்சிப்பானது "வருங்கோபத்தினின்று" தப்பி மரணகாலத்தில் நரகத்தைவிலகி மோட்சத்திற்குள் பாய்ந்துவிடும் ஓர் அதிருஷ்டமல்ல. அது தற்கால பாக்கியமாயிருக்கின்றது. அது இன்றே, இப்பொழுதே, பாவத்தைவிட்டு தேவனோடு ஐக்கியமாகி ஆனந்தமடைகிறதாயிருக்கிறது. பூலோகத்தில் இன்றையத்தினம் எத்தனையோலட்சம்பேர்கள் இந்த ரட்சிப்பைப்

and taught in the Bible is not a mere escaping from "the wrath to come," not a mere happy avoidance of hell or a lucky admission to heaven, not something which begins to exist at death. It is a present blessing. It is a separation from sin and a joyful union with God, *now, to-day*. Hundreds of thousands of people alive on the earth to-day are already saved; at death, their salvation will enter on a more glorious stage but it is begun already. "By grace ye *are* saved" says Paul to those who have tasted this blessing. Reader! you also may have salvation from sin this very day.

III. What is the way to get this salvation? Man is utterly helpless to procure it for himself, much less for others. God alone can save a man from his sin. "Not of yourselves, it is the gift of God." He alone can break down the separating wall: He alone can remove the poison from within. He offers to do it freely and fully for all who put their trust in his son Jesus Christ. *What must I do to be saved?* The answer is, Believe on, trust in, the Lord Jesus Christ, and thou shalt be saved. "Neither is there salvation in any other: for there is none other name under heaven given among men, whereby we must be saved."

பெற்றவர்களாய் வாழ்கிறார்கள்; மரண சமயத்தில் அவர்கள் இரட்சிப்பு இன்னும் அதிகச் சிறப்படையத்தக்கதானாலும் அது இப்பொழுதே ஆரம்பித்திருக்கிறது. இப்பாக்கியத்தை அநுபவித்தவர்களை நோக்கிப் பவுல் என்பவர் "நீங்கள் கிருபையினாலே இரட்சிக்கப்பட்டு இருக்கிறீர்கள்" என்கிறார். நண்பனே, நீயும் இன்றைக்கே பாவத்தினின்று இரட்சிப்புப் பெற்றுக் கொள்ளலாம்.

3. இந்த இரட்சிப்பை அடையும் வழி என்ன? மனிதனானவன் தனக்காகவும் மற்றவர்களுக்காகவும் இதைச் சம்பாதித்துக் கொள்ளத்தக்க சக்தியற்றவனாயிருக்கிறான். கடவுளே அவனைத் தன் பாவத்திலிருந்து விடுவிக்கவல்லவர். "உங்களாலே அல்ல, அது தேவனுடைய ஈவாயிருக்கிறது." நடுச்சுவரைத் தகர்க்க அவர் ஒருவராலேயே ஆகும். உள்ளான விஷத்தை, அவர் மாத்திரம் நீக்கக்கூடும். அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவில் நம்பிக்கைவைக்கும் யாவரையும் யாதொரு கைம்மாறின்றி இரட்சிக்கச் சித்தமாயிருக்கிறார். "இரட்சிக்கப்பட என்ன செய்வேன்" என்னும் கேள்விக்கு "எம்பெருமான் இயேசுகிறிஸ்துவை விசுவாசித்துப் பற்றிக்கொள், அப்பொழுது இரட்சிக்கப்படுவாய்" என்பதே விடை. "அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை."

## THE IMMORAL TENDENCY OF HINDUISM.—ஹிந்துமதம் துன்மார்க்கத்தை விளைவித்தல்.

கடவுளருளிய மதமானது காமக்குரோதலோபமதமாச்சரியங்களை அழித்து, பெற்றோர் பிள்ளைகளிடத்தும் பிள்ளைகள் பெற்றோரிடத்தும் அன்பு பாராட்டும்படி அவர்களை ஏவி, பொதுவிலே மனுஷனானவன் சன்மார்க்கநிலை தவறாது நடக்க அவனை எவ்விதத்திலும் தூண்டிவிடும் தன்மையதாயிருக்கவேண்டுமென்று நம்முடைய சாமானிய புத்தியால் அறிந்துகொள்ளுகிறோம். இந்து ஹிந்துமதத்தின் தன்மையோ என்று விசாரிக்குமளவில், மற்ற விஷயங்களிலே எவ்வாறோ அவ்வாறே இவ்விஷயத்திலும் அது அதிக குறைவுபாடுள்ளதாயிருக்கின்றது. ஏனென்றால்,

(i) வேதங்களிலே பழி, பகை, பொருளாசை, வியபிசாரம்முதலிய பாவங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. "சபிக்கும் வேதம்" எனச் சிறப்புப்பெயர் பெற்றிருக்கும் அதர்வண வேதத்திலே சத்துருக்களைச் சபிக்கத்தக்க பலவிதமந்திரங்கள் அடங்கியுள்ளன. சாமவேதத்திலிருந்து ஒரு சுலோகத்தைமாத்திரம் எடுத்துரைப்போம்: பரிசுத்த தர்ப்பையே, என் பகைஞரை அழித்து, என் சத்துருக்களை வேருடன் அறுத்துவிடு: ஓ சிகாமணியே, என்னைப் பகைக்கின்ற யாவரையும் நிர்த்தூளியாக்கிவிடு. ஓ இந்திரனே, பேராசைபொருந்திய எங்கள் பகைவரை நாசமாக்கி, தயைதாட்சண்யமுள்ள எங்கள் நண்பரை விர்த்திசெய். எங்களுக்கு ஆயிரமடங்கான அழகுள்ள பசுக்களும் குதிரைகளும் அளித்து எங்களை மேலோராக்குவாய்.

அடியில்வரும் பிரார்த்தனையினாலே வேதங்களிலே பொருளாசையும் போதிக்கப்படுகின்றதென்பது பிரத்தியட்சமாகின்றது. "எங்களுக்கு அதிக ஐஸ்வரியம் உண்டாகும்படி, இந்திரனே, உன்னைப் பிரார்த்திக்கின்றோம். அதை நீ மனிதரிடத்திலிருந்து கொண்டுவந்தாலும் சரி, தேவரிடத்திலிருந்து கொள்ளைஇட்டு வந்தாலும் சரி, அதை நீ அடிவானத்திலிருந்து அடைந்து வந்தாலும் சரி, மற்றெவ்விடத்திலிருந்து புரட்டி வந்தாலும் சரி, எங்களை எவ்வாறாயினும் தனவான்களாகச் செய்." இருக்கு வேதத்திலே, "ஓ இந்திரா, எங்களை மேலோர் வகுப்பிற் சேர்த்து, எங்களுக்குப் பொருள், பெண்கள், கல்வி, உணவு ஆகிய இவற்றைத் தந்தருள்வாயாக" என்றொரு செபமும் உண்டு. இதன்றி, பகவத்கீதையிலே, கிருஷ்ணன் "பொருளை வாஞ்சிப்போர் குற்றவாளிகள் அல்ல, நல்லோரே" என்று கூறுகிறார்.

மநுதர்மசாஸ்திரத்திலே ஒருவன் தன்மனைவி உடன்பட்டால் விபசாரம் பண்ணலாமென்று மாத்திரமல்ல, அவசியம்பண்ணவேண்டும் என்றும்; பண்ணாமற்போனால் குஷ்டரோகியாய் விடுவானென்று ஒரு சட்டவிதியால் விசதமாகிறது. மஹாபாரதத்திலும் இதற்கிசைவான ஒரு உபதேசமுண்டு. மேலும், யாதாயினும் ஓர் சடங்கை நிறைவேற்றும்பொருட்டு ஒருவன் திருடலாமென்றும், நன்மைசெய்யும்பொருட்டு ஒருவன் தப்புச்சாட்சி சொல்லலாமென்றும், ஒரு பிராமணனுடைய உயிரைக் காக்கும்பொருட்டும், தன் மனைவியின் சினத்தைத் தணிக்கும்பொருட்டும், வேசியைப் பிரியப்படுத்தும்பொருட்டும் பொய்சொல்லலாமென்றும் மேற்படி தர்மநூலில் விதித்திருக்கின்றது. மேலும் குருடு, செவிடு, முடம், ஊமை, அங்கவீனம், குஷ்டம் முதலிய குறையுள்ள ஆண், பெண்கட்குச் சுதந்தரம் இல்லை என்றும், தற்கொலை செய்துகொள்வதே அவர்களுக்கு உத்தமம் என்றும் அதிலே கூறியிருக்கின்றது.

புருஷனுக்கும் பெண்சாதிக்கும் இருக்கவேண்டிய ஐக்கியத்தைக்குறித்தாவது, பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் இருக்கவேண்டிய அன்பைக்குறித்தாவது வேதங்கள் அவ்வளவாய்ப் போதிக்கிறதில்லை. இதற்கிசைய பரசுராமன் தன் தாயாரை உயிர்வதை செய்தது தர்மமென்றும், பிரஹலாதன் தன் தந்தை சொற்கேளாமல் அவனுடைய பிராணச்சேதத்திற்குக் காரணனானது மிக்க புண்ணிய செயலென்றும் கூறப்பட்டிருக்கிறது.

அன்றியும் பெண்கள் ஆண்களைப்பார்க்கிலும் இழிந்தவர்களென்றும் வேதங்களிற் போதித்திருக்கின்றது. அவர்கள் வேதத்தை ஒருக்காலும் ஓதவும் கேட்கவும் கூடாது. மநுதர்மசாஸ்திரத்திலே மனைவிக்குப் புருஷன் இட்டதே சட்டமென்றும், அவன் அவளை விபசாரம்பண்ணச் சொன்னாலும் அவள் அதை மறுக்காமல் பண்ணவேண்டுமென்றும் விதித்திருக்கின்றது. அவ்வாறு செய்த அநேக ஸ்திரிகளைக்குறித்துச் சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிறது. ஸ்கந்தபுராணத்திலே கண்டிருக்கிறதாவது: "பரிசுத்த ஸ்நானனுஷ்டானங்களைச் செய்யவிருக்கும் மனைவியானவள் முதல் தன் நாயகன் பாதங்களைக் கழுவி, அக்கழுவின சலத்தைப் பானம்பண்ணவேண்டும்; ஏனென்றால், மனைவிக்குப் புருஷன் விஷ்ணுவிலும் சிரேஷ்டன். அவன் அவளுக்குக் கடவுளும், குருவும், மதமும், அதின் ஆசாரமுமாயிருக்கிறான்: ஆதலால் அவள் சகலத்தையும் துறந்து தன் புருஷனை விஷ்ணுவாகப் பாவித்து அவன் ஒருவனையே பூசித்து நடக்கவேண்டும். அவள் அன்பில்லாவார்த்தை ஒன்று சொன்னாலுமே அவன் அவளை நீக்கிவிடலாம்" என்று மநு உரைத்திருக்கிறார். அவன் அவளை நோக்கி "இனி நீ என் மாதா" என்ற மாத்திரத்தில் அவர்களின் ஸ்திரீபுருஷ சம்பந்தம் அற்றுப்போகிறது. அதுவுமன்றி பரதாரகமனமும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஸ்திரீயானவள் இந்த கஷ்டநஷ்டங்களையெல்லாம் பொறுமையுடன் சகித்துவருவதும் போதாமல் தன் நாயகன் இறந்தபின்பு அவனுடைய பிரேதத்துடன் தன்னையும் தகித்துக்கொள்ளவேண்டிய புண்ணியசாலியாகவும் தீர்க்கப்பட்டிருக்கின்றாள்.

மேலும் சகலவிதமான அக்கிரமங்களும் அவலட்சணங்களும் யாதொருநாணமின்றிக் கூறப்பட்டிருக்கின்றன. திரிமூர்த்திகளும் முக்கியமான இரண்டு அவதாரபுருஷர்களும் நடப்பித்ததாகச் சொல்லியிருக்கும் துர்க்கிருத்தியங்கள் யாவருக்கும் தெரிந்த விஷயமே. மற்றத்தேவதைகள், முனீஸ்வரர்கள், ரிஷிகள் முதலானோருடைய நடபடிக்கைகளும் அவ்வாறே உள்ளன. வருணன் ஊர்வசி என்னும் தேவதாசியோடு செய்த விபசாரத்தினால் ரிஷிகளிலே பேர்போன அகஸ்தியன் பிறந்தான். பலராமன் குடியனும், தூர்த்தனும், சூதாடியுமாயிருந்தான்; அதற்கவன் சகோதரன் கிருஷ்ணனே சாட்சி. வேதங்களைச் சேகரித்து வேதாந்தசாஸ்திரத்தையும் பதினெண் புராணங்களையும் இயற்றிய வேதவியாஸன் வியபிசாரத்திற்பிறந்து, தன் சகோதரனுடைய மூன்று மனைவிகளையும் சேர்ந்து மூன்றுபிள்ளைகளைச் செனிப்பித்தவன். அவர்களில் ஒருவன் பாண்டு. இந்தப் பாண்டுவின் ஐந்துபுத்திரரும் திரௌபதை என்ற ஒரேபெண்ணை ஆண்டுவந்தார்கள். மேலும் சக்திப் பூசையிலும், காளிப் பூசையிலும், ஹோலி என்னும் உற்சவத்திலும் ஆடவராலும் மகளிராலும் பாடப்படும் அசுத்தமான பாட்டுக்களை இவ்விடத்தில் எடுத்துரைக்கவே கூடாது.

எமதன்பராகிய ஹிந்துக்களே, இதுகாரியங்களை நீங்களே சீர்தூக்கிப்பாருங்கள். இப்படிப்பட்ட உபதேசங்களையும் விதிகளையும் விசேஷமாக உடைய உங்கள் மதத்தை அநுசரித்திருக்கும் பிரசைகளின் நடத்தை எவ்வாறாகும்? மரமெப்படியோ அப்படியே அதின் கனியும். விதிவிலக்குகள் தீதாயின், நடபடிக்கையும் தீதாகும். தங்கள் மதத்தைவிடச் சீராயிருக்கும் சனமும் உண்டோ? ஹிந்துக்களிடத்திலே தங்கள் மதத்தால் விளைந்திருக்கும் துன்மார்க்கத்தைக் காணும்பொழுது, மதம் எவ்வாறோ அவ்வாறே அதை அநுசரிப்போரும் என்றே துணியவேண்டும்.



## ANSWERS TO OBJECTIONS.—சந்தேக நிவிர்த்தி.

ஏசுக்கிறிஸ்து மதவாய் ஆப்புத் தூஷண பரிகாரம். (தொடர்ச்சி.)

பின்னும் "வேதத்தை எழுதியவர்கள் புளுகிக் கண்டபடி எழுதிவைத்தார்கள்" என்றுரைக்கிறாய். நீ இவ்வாறு வெகு எளிதில் புளுகிவிட்டாரென்று கூறத்துணிவது, ஓர் மூடசிரோமணி உலைமூடியை எடுத்து உலகவாயிலனைத்தையும் மூடத்துணிவதுபோலாம். உன் சமயகர்த்தாக்களினுடைய மூளையினின்று உற்பத்தியாகிய திருப்பாற்கடலை தேவரும் அசுரரும் மந்தரகிரியை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவுங் கொண்டு கடைந்தார்களென்றும், அகஸ்தியர் சமுத்திரநீரை முழுதும் கையிலேந்திக் குடித்துவிட்டு ஜலவாதைசெய்துவிட்டாரென்றும், விந்தகிரியைப் பாதலத்திற்புக அமுக்கினாரென்றும் உன் சமயாகமங்கள் கூறிய கடற்புளுகு மலைப்புளுகு முதலியவை எமது சத்தியவேதத்திலில்லை என்றறிக. சத்திய மார்க்கமாகிய கிறிஸ்துசமயம் மானிடசிருஷ்டி ஆரம்பத்தோடு கூடி உடனிகழ்ந்து, இந்நாள்வரையும் தனது இரக்ஷண்ய மகிமையை விளங்கச்செய்துவருகிறது. இவ்வரன்முறையைப் பக்ஷபாதமின்றி யோசேப்புஸ் முதலிய இதிகாச நூலாசிரியர்கள் தங்கள் சரித்திர நூல்களில் எழுதிவைத்திருக்கின்ற மெய்யான உலக சரித்திரத்தை அநுசரணையாகக்கொண்டு ஆதியோடந்தமாய் விசாரணைபண்ணி ஆராய்ச்சிசெய்வாயாயின் உண்மை விளங்கும்.

பின்னும், "மண்ணெடுத்து மானிடனைச் செய்த சாமி மறுபடியும் விலாவெலும்பை எடுத்ததேனோ?" என்று மதிமயங்கி தேவனுடைய சர்வஞ்ஞத்துவத்தை உன் கிஞ்சித்வ அறிவினால் பரீக்ஷிக்க முயன்றனை. உயிரற்ற பிரமாண்ட அக்கினிகோளமாய் எட்டாக் கையினின்று தன் கவர்ச்சி வலிமையினால் அநேக கிரகங்களை இயக்கும் பெரிய கிரகமாகிய சூரியனை காசிபருடைய பத்னியாகிய அதிதி என்பவள் ஈன்றாள் என்ற அசம்பவத்தில் மயங்கியிருக்கின்ற உன் மயக்கம் தெளியுமட்டும் கடவுள் ஆதாம் என்னும் ஒரு மனுஷான்மாவை உண்டாக்கி, அவனோடு சம்பந்தமான தொடர்ச்சியுண்டாகும்பொருட்டு அவன் விலா எலும்பிலிருந்து இரண்டாவது மனுஷான்மாவைச் சிருஷ்டித்த சம்பவம் உனக்கு வியப்பாய்த் தோன்றுமென்பதைக் கேட்பானேன்!

பின்னும், "புசிக்கப் பலகனி யளித்துப்போன சாமி, தின்னவேண்டாமென்றுரைத்துச் சென்ற சாமி, திரும்பி வந்து சொன்ன சர்ப்பம் எந்தச் சாமி" என்று நீ ஈளினமாய் வினவியதோடு, "எண்ணியதன் பொருள் பார்த்தால் எல்லாஞ் சாமி" என்று விடையுங் கூறுகின்றாய். ஆகையால் உன் விடைக்கு மேற்கோளாக யாமும் சமயோசிதமான சில விடைகள் உன் வினாவுக்கேற்கப் பகர்வது நன்றல்லோ? அது உன் புத்திக்குப் புலப்பட்டு உன் புத்தியை விசாலப்படுத்துவதற் கேதுவாகுமல்லோ? "சர்ப்பம் எந்தச் சாமி" என்றாய். அவன்தான் அகந்தைச் சாமி, அவன்தான் உன் அகந்தையை மூட்டிய சாமி, அவன்தான் சுடலைச்சாமி, அவன்தான் கடலைக்கடைந்து மோகினிரூபமெடுத்த மோகச்சாமி, அவன்தான் உன்னை அஞ்ஞானமென்னும் படுகுழியிலமிழ்த்தி உன்னைக் குரங்காட்டங் கொள்ளுங் குரங்குச்சாமி என்றறிக.

பின்னும், (லூக். 19. 30-35.) கிறிஸ்துநாதர் "தம்முடைய சீஷரில் இரண்டுபேரை நோக்கி, உங்களுக்கு எதிரேஇருக்கிற கிராமத்துக்குப் போங்கள், அதிலே பிரவேசிக்கும்போது மனுஷரிலொருவனும் ஒருக்காலும் ஏறியிராத கழுதைக்குட்டியைக் கட்டியிருக்கக் காண்பீர்கள்; அதை அவிழ்த்துக் கொண்டு வாருங்கள், அதை ஏன் அவிழ்க்கிறீர்களென்று யாராவது உங்களிடத்தில் கேட்டால், அது ஆண்டவருக்கு வேண்டுமென்று சொல்லுங்கள் என்றார். அனுப்பப்பட்டவர்கள் போய்த் தங்களுக்கு அவர் சொன்னபடியே கண்டார்கள். கழுதைக்குட்டியை அவர்கள் அவிழ்க்கும்போது, அதற்குடையவர்கள் குட்டியை ஏன் அவிழ்க்கிறீர்களென்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், அது ஆண்டவருக்கு வேண்டுமென்று சொல்லி, அதை இயேசுவினிடத்தில் கொண்டுவந்தார்கள்." இவ்விஷயத்தில் கழுதைக்குடையவர்கள் இயேசுவின் பக்தர்களென்றும், சீஷர்கள் அவர் நாமத்தைச் சொல்லி இனம் அறிவித்து அவர்கள் கண் பார்வையிலேயே அவிழ்த்துக்கொண்டு போனார்களென்றும் பட்டப்பகல்போல் விளங்கிக் கிடக்க, இதற்கு விரோதமாய் நீ "கழுதையை ஏன் வஞ்சித்தார் திருட்டுச்சாமி" என்று பழிசாற்றி, கோபிகா ஸ்திரீகள் ஓலமிடும்படி இடைச்சேரியில் வெண்ணெய் திருடித் திரிந்த கிருஷ்ணனுடைய இலட்சணத்தை வெளியிடாமல் மௌனமாயிருந்து மெய்யைப் பொய்யென்றும், பொய்யை மெய்யென்றும் சாதிக்கத் துணிந்து, "பட்டப்பகலில் வெள்ளைக்காக்கை பறக்கிறதென்பார்" என்னும் பழமொழியை மெய்ப்பித்த உன் யூகம், மயூகம்! மயூகம்!

பின்னும், "இடம் பொருளும் ஏவலெல்லாமளிக்குஞ் சாமி என் தனது உயிரிழந்தார் குருட்டுச்சாமி" என்றிவ்வித பித்தபைத்திய வசனங்களை வரைகின்றாய். உன் இந்துமதஸ்தருள் அநேகர் குற்றமில்லாத ஆடுமுதலியவைகளைப் பலியிடுகின்ற வரலாற்றையும், அதற்குக் காரணமாயிருந்த விஷயத்தையும் தீர்க்க விசாரணைசெய்து உண்மையைக் கண்டறிய முயற்சித்திருப்பையாயின், இவ்வளவு அறிவீனமாய் வினவத் துணியமாட்டாய். தேவன் தமது சற்பனையை மீறின பாவிகளைத் தண்டிக்க நீதியுள்ளவரா யிருப்பதுபோல், தாங்கள் புண்ணியமென்று நினைத்துச் செய்கின்ற எவ்வித கிருத்தியங்களினாலும் நிவிர்த்தியாக்கப்படாத தேவ கோபாக்கினையின் கீழ்ப்பட்ட பாவிகளுக் காதரவான அன்புள்ள கடவுளாயுமிருக்கிறார். அக்கடவுளின் அன்பின் இலட்சணமே, தேவகுமாரன் மானிட அவதாரமானதற்கு ஆதாரம். அன்பே வடிவமாய்க் கொண்டவதரித்த இரட்சாபெருமானாகிய கிறிஸ்துநாதர், "இரத்தஞ் சிந்துதலில்லாமல் பாவமன்னிப்பில்லை" என்று ஆதியில் விதிக்கப்பட்ட பிரமாணத்தை நீதியின்படி நிறைவேற்றி, பாவிகளுடைய சர்வசங்க பரித்தியாகத்தினாலும் நீங்காத சகல பாவங்களையும் நீக்கி, தேவ கோபாக்கினையைச் சாந்திசெய்து, பாவிகள் உய்வடைய இரட்சண்யத்தை ஸ்தாபிப்பதற்கு, "அன்பைப்பெருக்கி ஆருயிரை ஈந்திட்ட இன்பப்பெருக்கே இறையே பராபரமே" என்றபடி பிராணத்தியாகம்பண்ணி கிருபாமூர்த்தியாய் விளங்கினார். இவ்வுண்மையை அறியாமல், இவரது அன்பின் இலட்சணத்துக்குக் குறைகூறி, நீ ஆபாசகிரியினின்று அட்டகாசம்பண்ணியது பேதைமை என்றறிக. மேலும் இவ்விதமாய் உயிர்விட்ட இயேசு இரட்சகர் மறுபடியும் உயிரடைந்து வெற்றிசிறந்தவராய் உன்னதத்திற் கெழுந்தருளிய விஷயம் உன் புத்திக்குப் புலப்படாமல் போனதென்ன?

பின்னும், (மத். 3. 10.) "இப்பொழுதே கோடரி மரங்களின் வேர் அருகே வைத்திருக்கிறது, ஆகையால் நல்லகனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும்" என்று கூறிய இவ்வுபமானத்தைக் கொண்டு கிறிஸ்துநாதர் தமது பக்தர்கள் (கலா. 5. 22.) அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியபொறுமை, தயவு, நற்குணம், விசுவாசம், சாந்தம், இச்சையடக்கமுதலிய ஆவியின் கனிகளைக் கொடுக்கிறவர்களா யிருக்கவேண்டுமென்று கண்டிப்பாய் உபதேசித்தார். பின்பு இவ்விஷயத்தை யூதர்களுக்கு வற்புறுத்திக் காட்டும்பொருட்டு மேற்சொல்லிய உபமானத்துக்குச் சம்பந்தமாய்க் கனி கொடாத அத்திமரம் ஒன்றைக்கண்டு "இனி ஒருக்காலும் உன்னிடத்தில் கனி உண்டாகாதிருக்கக்கடவது" என்று கூறி அதைப் பட்டுப்போகும்படி செய்வித்து அற்புத விஷயமாய்த் திருஷ்டாந்தப்படுத்தினார். இவ்விஷயத்தை நன்காராயாமல், "பசியினால் அத்திக்கனி பிடுங்கச்சென்று, பார்த்து வயிறெரிந்து அங்கே நின்ற ஏசு, வசையளித்தான், சாபமிட்டான் என்று சொன்னால், சூல்முளைத்த வயிரவனுஞ் சிரித்திடானோ" என்று நீ இகழத்துணிந்த உன் அறிவு "ஏட்டுச்சுரைக்காய் கறிக்காகுமா?" என்னும் பழமொழிக் குதாரணமாகியதென்றறிக.

(இன்னும் வரும்.)

சத்தியதூதன் அறிக்கைப்பத்திரிகை. — இன்று நான் எனது இரண்டாம் வருஷத்தை ஆரம்பிக்கிறேன். சென்றவருஷத்திலே செய்ததுபோலவே இந்தவருஷத்திலும் சத்தியத்தையே அன்புடன் உபதேசித்துவருவேன். அன்றியும் தெலுங்கு நாட்டாரின் பிரயோஜனத்துக்காக இம்மாதம் தொடங்கி தெலுங்குபாஷையிலேயும் என் செய்தியைச் சொல்ல ஆரம்பித்திருக்கிறேன். கடவுள் என் பத்திரிகைகளைக் காத்தருள்வாராக.

## NEWS AND NOTES.—வர்த்தமானக்குறிப்புகள்.

**பூமி அதிர்ச்சி.** — சென்றமாதம் சிக்கந்தரபாத்திலே உண்டான பூமி அதிர்ச்சி பல இடங்களுக்குப் பரவியதென்று கேள்வி.

**மனுஷசாஸ்திரசங்கம்.**—பம்பாயிலுள்ள இந்தச்சங்கத்தில் 24 கைவிரலுள்ள ஒரு சுதேசி விநோதக் காட்சியாய்க் காண்பிக்கப்பட்டான்.

**சம்பளக்குறைவு.**—500 ரூபாய்க்கதிகப்பட்ட சம்பளங்களையெல்லாம் கவர்ன்மெண்டார் குறைக்கும்படி உத்தேசித்திருக்கிறதாகப் பிரஸ்தாபம்.

**சுதேச பாரிஸ்டர்.**—நாராயணசாமிசெட்டி என்னும் ஓர் சுதேசபாரிஸ்டர் இங்கிலாந்தில் பரிட்சைதேறி இத்தேசம் வந்திருக்கிறார்.

**அபூர்வகாட்சி.**—ஆலிஸ் கார்ன்வால் என்னும் ஓர் பெண்ணுக்கு பொன்சுரங்கங்கள் இருக்கும் ஸ்தானங்களைப் பிழையின்றிக் குறித்துக்காட்டும் சக்தி உண்டு.

**கவர்னர் ஜெனரலவர்கள்.** — கவர்னர் ஜெனரலவர்களின் விரல்களின் நரம்புகளில் ஓர்விதச் சுளுக்குண்டாகி ரணவயித்தியர்கள் அதுகளை அறுக்கவேண்டியதாயிற்று.

**க்ஷயரோகம்.** — தீராநோய்களில் ஒன்றாகிய க்ஷயரோகமுடையவர்களுக்கு கந்தகம், அபின், பிராந்தி முதலியவற்றைக் கொளுத்திப் புகைகாட்டுவதால் அதிக ஆரோக்கியம் உண்டாகிறதாம்.

**லண்டன் நகரத்து சனத்தொகை.**—இந்தப் பிரம்மாண்ட பட்டணத்திலே 47 லட்சத்து 65 ஆயிரம் குடிகளுண்டு. சென்னைநகரத்துக்கு அது பன்னிரண்டுமடங்கு அதிகமானதாயிருக்கவேண்டும்

**சிதம்பரத்தில் பிராணச்சேதம்.**—இவ்வூர்க்கடுத்த நஞ்சலூர் என்னும் கிராமத்திலுண்டான உற்சவத்தில் 25 பேர் வெடிமருந்து அகஸ்மாத்தாய்த் தீப்பற்ற அதனால் எரியுண்டு மாண்டுபோனார்கள்.

**கிராபர்ட் கேஸ்.**—இந்தக் கேசை நடத்தும்பொருட்டு கவர்ன்மெண்டாருக்கு ஏறக்குறைய 2 லட்சம் செலவாகும் என்று கணக்கிட்டிருக்கிறது. இது வீண்செலவு என்றுதான் சொல்லவேண்டும்.

**ஹிந்துக்களின் உள்கட்சி.**—விஷ்ணு பெரியவரோ சிவன் பெரியவரோ என்கிற விஷயத்தின்பேரில் வைஷ்ணவாளுக்கும் சைவாளுக்கும் தற்காலம் வாக்குவாதம் நடந்துவருகிறது. ராமர் ஒருகால் சிவபூசைசெய்ததாகச் சைவர் கூறுகின்றார்.

**கலெய் கான்ஸ்டான்டினோபில் ரெயில்வே.** — தற்காலம் லண்டனுக்கருகிலிருக்கும் கலேயிலிருந்து யூரோப்பின் தென்கீழ் எல்லையாகிய கான்ஸ்டான்டிநோபிலுக்கு இரண்டே தினத்தில் பிரயாணஞ் செய்யலாம்.

**காலஞ்சென்ற ஜர்மன்சக்கரவர்த்தி.** — இந்த உத்தமபுருஷன் இளைஞனாயிருந்தபோது அச்சுவேலை கற்றுக்கொண்டார். ஒவ்வொருவரும் ஏதாயினுமோர் கைத்தொழில் கற்றிருப்பது வெகுவும் பிரயோசனமாயிருக்கும்.

**கள்ளிக்கோட்டை டெப்யுட்டிக்கலெக்டர்.**— ஸப்ஜட்ஜு குஞ்சன்மேனன் தீர்ப்புப் பெறுகிறதற்குள் கள்ளிக்கோட்டை டெப்யுட்டிக்கலெக்டர் குன்னிக்கன்னன் பரிதானம் பெற்றதாக வியாஜ்யம் தொடுக்கப்பட்டிருக்கிறது.

**ஸர். மாதவராவும் அவர் குலத்தினரும்.**—தற்காலம் பிராமணர்கள் பலத்திலும், அந்தஸ்திலும், கல்வித்திறமையிலும் குன்றிப்போகிறதைப் பார்த்து ஸர். மாதவராவவர்கள் அவர்களுக்கு நற்புத்தி சொல்லுகின்றார்.

**பசுவதை.** — பசுக்களைக் கொல்லாதபடிக்குச் சிலபேர் பங்காளம் முதலிய இடங்களில் அதிக முயற்சி எடுத்துக்கொள்ளுகிறார்கள். இந்த முயற்சிக்கு ஒரு சந்நியாசி தலைவராய் இருக்கிறார்.

**நாஷனல் காங்கிரஸின் சத்துரு.**—இந்த மகாசங்கத்துக்கு தேசாபிமானசங்கம் என்றொரு விரோதசங்கம் ஸர். சையிட் ஹாமிட் என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அதிலும் அனேக சீமான்கள் சேர்ந்திருக்கிறார்கள்.

**விலையுயர்ந்த கல்.**—ஒரு சிறுவன் பொறுக்கி அற்பவிலைக்கு விற்ற ஓர் கல்லை ஒருவன் 750 ரூபாய்க்கு வாங்கி, அதை இன்னொருவனுக்கு 4500 ரூபாய்க்கு விற்றான். அனேகருக்குத் தங்களிடத்திலிருப்பதின் அருமை பெருமை தெரிகிறதில்லை.

**கவர்ன்மெண்டார்.** — ஆனரபில் மாஸ்ட்டர் துரையவர்கள் சௌக்கியத் தாழ்ச்சியால் ராஜிநாமா கொடுக்கப்போகிறார். அப்பொழுது ஸ்டோக்ஸ் அவர்கள் முதல் மெம்பரும் கார்ஸ்டின் அவர்கள் இரண்டாம் மெம்பரும் ஆகும்படித் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**ஹிந்துஸ்திரீகள் கல்விச்சாலை.** — ஹிந்துஸ்திரீகளின் கல்வி விர்த்திக்கென்று திருவல்லிக்கேணியிலே நூதனமான ஒரு கல்விச்சாலையை ஏற்படுத்தப்போகின்றார்கள். அதிலே உயர்ந்த கல்வி, தையல், வாத்தியம், வீட்டுக்கடுத்த விஷயங்கள் முதலியன கற்பிக்கப்படும்.

**மைசூர் திவான்.**—மைசூரின் திவானாகிய சேஷாதிரி ஐயரவர்களுக்கு இனிச் சம்பளம் 5000 ஆகும்படி உத்தரவாயிருக்கின்றது. மேற்படி இராஜ்யத்தின் வரவுத்தொகை அதிகப்பட்டிருப்பதால், இந்த விர்த்திக்குக் காரணராகிய திவானுக்கு அதிக சம்பளமும் கிடைக்கின்றது.

**நாய்க்கடி.** — சென்றமாதத்தில் நாய்க்கடியால் பலபேர் இறந்துபோனதாகப் பத்திரிகையிலே காண்கிறோம். காயத்தைக் காஸ்டிக் என்னும் வஸ்துவால் காலதாமதமின்றிச் சுட்டுவிட்டால் கடியுண்டவன் சாகான் என்று வைத்தியர் கூறுகின்றனர்.

**அழகான மங்கையர் காட்சி.**—ஸ்பா என்னும் நகரத்திலே அதி சௌந்திரிய ஸ்திரீகாட்சி ஒன்று தொடங்கியிருக்கிறது. எந்தவர்ணத்து ஸ்திரீகளும் அவ்விடம்போய்க் காட்சி கொடுக்கலாம். எல்லாரிலும் அழகிற் சிறந்தவளுக்கு 20000 ரூபாய் வெகுமானஞ் செய்யப்படும்.

**விஷபேதி நீக்குதல்.** — வைசூரியை விலக்கும்படி அம்மைகுத்துவதுபோலவே விஷபேதியை விலக்கும்படியும் மேற்படி பேதியின் விஷத்தைக்கொண்டு அம்மைகுத்திக்கொண்டால் அதிகப்பயனுண்டாம் என்று வைத்திய நிபுணர் பிரயத்தனஞ் செய்துவருகின்றார்.

**செங்கல்பட்டு ரெபர்மெடரிஸ்கூல்.**—இந்த நாமதேயங்கொண்ட ஓர் கைத்தொழில் வித்தியாசாலை சிறு கைதிகளின் பிரயோசனத்துக்காக கவர்ன்மெண்டாரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதனால் ஜெயிலுக்குப் போகும் சிறுவர்கள் சீர்திருந்திப் புறப்படுவார்கள் என்று கோரப்படுகின்றது.

**பஞ்சாபில் சிறுகலகம்.** — பஞ்சாபிலேயுள்ள ஹஸாரா என்னும் நாட்டுக்குடிகள் அரசாட்சிக்கு விரோதமாய் எழும்பியிருக்கிறார்கள். இக்கலகத்தை அமர்த்தும்பொருட்டு இங்கிலிஷ் ராணுவம் அவர்கள்மேல் படையெடுத்துப்போயிருக்கிறது.

**அக்கினிப்பிரளயம்.** — அமெரிக்காவில் கெயென் என்னும் பட்டணத்திலே அக்கினிப்பிரவேசம் உண்டாகி ஏறக்குறைய 10 கோடி ரூபாய் பொறுமான சரக்குகள் நாசமாய்ப் போயின. குடிகளுக்கு நேரிட்ட கஷ்டநஷ்டங்கள் இவ்வளவென்று சொல்லமுடியாது.

**பார்லிமெண்ட் மெம்பர்கள் சிறையிருப்பு.**—சுதேசிகளை மாத்திரம் காவலிலடைக்கிறார்கள் என்று நாம் எண்ணலாகாது. மஹாசபையாகிய பார்லிமெண்டு மெம்பர்களையும் சரியான காரணத்திற்காகச் சிறையில் வைக்கிறார்கள். சில தினங்கட்கு முன்பு ரெட்மண்ட் என்பவருக்கு 5 வாரச்சிறையிருப்புக் கிடைத்தது.

**மூழ்கிப்போகும் தீவு.** — வட அட்லாண்டிக் சமுத்திரத்திலே ஸேபில் என்னும் ஓர் தீவு கொஞ்சங்கொஞ்சமாய் முழுகிப்போகிறது. சில வருஷங்களுக்குமுன்னே அதின் அகலநீட்சி முறையே 40 மைலும் $2\frac{1}{4}$ மைலுமாயிருந்தது; இப்பொழுது அவை 19 மைலும் $\frac{3}{4}$ மைலுமாம். சிறு தீவுகள் தோன்றுவதும் மறைவதும் சகஜமே.

**கைத்தொழில் வித்தியாசாலை.**— உயர்ந்தவிதமான தச்சுவேலை, சித்திரவேலை, சிற்பவேலை, கம்மாளவேலை முதலியவைகளைச் சாஸ்திரமுறைப்படிக் கற்பிக்கும்பொருட்டுச் சென்னையிலே வெகு சீக்கிரத்தில் கைத்தொழில் வித்தியாசாலை ஒன்று ஸ்தாபிக்கப்படும் என்பதற்குச் சந்தேகமில்லை. ஒன்றரைலட்சம் ரூபாய் சேகரிக்கப்படும்போலிருக்கிறது.

**ஓர் துர்வழக்கம்.**— ஹிந்துக்களில் அநேகம்பேர் தங்கள் குழந்தைகளை மகம்மதிய கோவில்களுக்குக் கொண்டுபோய் மந்திரித்துக்கொள்ளுகிறதுமன்றி கொஞ்சம் பஸ்பமும் கையிலே வாங்கிக்கொள்ளுகிறார்கள். இதை என்னவென்று சொல்லுவோம்? ஹிந்து டிராக்ட் ஸொஸைட்டியார் இதை நிறுத்தும்பொருட்டு ஒரு சிறுபத்திரிகை எழுதவேண்டும்.

மாதாந்திரப்பத்திரிகை: இதன் விலை 1 பை: 25 பிரதிகள் 2 அணா.

**Vol. II.** No. 1. நவம்பர்மீ, 1888.

To be had of Mr. A. T. SCOTT, Tract Depôt, MADRAS, at Re. 1. per 200 Copies. Postage extra.

Printed at the S. P. C. K. Press, Vepery. 1888.

